உ

சிவமயம்.

பாலருவாயர் துணை.

# ஞானசம்பந்தர் நவமணிமாலையும் ஆவினன்குடி அந்தாதியும்.

இவை

தேவகோட்டை

"பாலகவி" வயிநாகரம்.

வே. இராமநாதன் செட்டியாரால்

தமது 23, 24-ம் ஆண்டு நிறைவுகளுக்கு

அறிகுறியாக இயற்றப்பெற்று

---

தேவகோட்டை

"ஸ்ரீ ஆனந்தவல்லி" அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பெற்றன.

---

1939.

உ

சிவமயம்.

பாலறாவாயர் துணை.

ஞானசம்பந்தர்

# நவமணிமாலையும்

ஆவினன்குடி

# அந்தாதியும்.

இவை

தேவகோட்டை

"பாலகவி" வயிநாகரம்.

வே. இராமநாதன் செட்டியாரால்

தமது 23, 24-ம் ஆண்டு நிறைவுகளுக்கு

அறிகுறியாக இயற்றப்பெற்று

---

தேவகோட்டை

"ஸ்ரீ ஆனந்தவல்லி" அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பெற்றன.

1939.

உ
சிவமயம்,
பாலரூவாயர் துணை.

# சாற்றுக் கவிகள்.

மதுரை சேண்ட் ஜோசப்ஸ் பெண்கள் கல்லூரித்
தலைமைத் தமிழ்ப் பண்டிதர்
வித்வான்

## S. ஆழ்வாரையங்காரவர்கள்:—

பூமலியும் பொங்கர் புடைசூழ்ந்த கோநகரான்
நாமலியுஞ் சீர்த்தி நலமார் தனவணிகன்
ஏமமுற "மா தேவ" வென்றென் றினிதியம்பிச்
சேமமுற வாழ்வான் முருகப்ப சீமானே.

கற்பகவி நாயக கலாசாலை கண்டதனைப்
பொற்புமிகப் போற்றும் புனிதனெமைப் பல்லாண்டு
அற்பு மிகப்புரந்த வண்ண லவன்முனஞ்செய்
பற்பனல் லூழாற் பழநியப்பன் றோன்றினனே.

அன்னவன் பின்னர்ப் புகழொடு தோன்றி
யருந்தமிழ் நூல்பல வாய்ந்து
மன்னிய பால கவியெனச் சிறந்து
மகிழ்வயி நாகர குடும்பந்
துன்னுவே ராம நாதனற் பெயர்கொள்
தூயவ னேயமிக் குடையான்
பன்னருங் குணமா மலையெனப் பொலிவான்
பாவலர் புகழ்ந்திட மாதோ.

அவனிரு பான்மூன் ருயகல் லாண்டு
நிறைவுறற் சுறிகுறி யாக
நவமுறு நலஞ்சேர் ஞானசம் பந்தர்
நவமணி மாலையு நாடித்
திவமுறு மிருபா ளுன்கினுக் காவி
னன்குடித் திகழுமங் தாதிப்
பவமறு நாலும் பாக்குறச் செய்தான்
பாலெனப் பகர்ந்திட மன்னே.

இவையே சுவையே எவையோ எனவே
அவையே பொலிய வமைத்த—நவையில்
அருளே தெருளே அவைகொள் அவனே
பொருளே மிகவாழ்க போந்து.

தேவகோட்டைச் சைவப்பிரகாச வித்தியாசாலைத்
தலைமைத் தமிழாசிரியர்,
திருவாளர்
அ. கணபதி ஐயா அவர்கள்:—

ஊனகந் தங்கு முயிரு ளொளிதருவான்
ஞானசம் பந்த னறும்புகழைத்—தேனொழுக
மைந்தார் நவமணி மாலையெனப் பாலகவி
தந்தானி ராமநா தன்.

திருவாவி னன்குடிச் சேவ்வேட்கந் தாதி செழுந்தமிழிற்
பொருளேய்ந்த சொல்லாற் புனைந்தனன் றூய புகழ்விளங்கு
பெருவாழ்வு மன்னு திருவாளன் மிக்க பிறங்கொளிசேர்
கருவூலன் பால கவிராம நாதன் களிப்புறவே.

காரைக்குடி "செட்டிநாடு" ஆபீஸ் ஜெனரல் மானேஜர்,
திருவாளர்

### சேவு. மெ. மெய்யப்ப செட்டியாரவர்கள்:—

பூவையார் சோலைத் தேவைப் புனிதன்வே ராம் நாதன்
மாவயி நாக ரப்பேர் மன்னுமா மரபு வந்தோன்
சேவைசெய் தென்றுங் காழிச் செம்மல்தாள் மனத்து வைத்
[தோன்
பாவையன் னவற்கே பாடும் பண்புளா னன்னோன் மேலும்.

ஆண்டுதொறு நினைவாக வருட்குமரன் றிருவடிக்கே
காண்டகைய சொன்மாலை கழறுகின்ற மாண்புடையான்
சேண்டகையார் வந்திறைஞ்சுஞ் சீர்காழிச் சிறுவருக்குப்
பூண்டகைய நவமணிப்பாப் பொற்புமிகப் புனைந்தனனால்.

ஆவினன் குடியில் வாழு மண்ணல்வேற் குமரன் றூட்குப்
பாவினத் தாலந் தாதி பாடினேன் தேவை தன்னுள்
தாவிலாக் கீர்த்தி யோங்கித் தழைக்கும்வே ராம நாதன்
பாவினுக் கிணைய தாகப் பகர்பொரு ளேது மாதோ.

தகவுடையவ் வந்தாதித் தனிப்பாவாற் றுதிப்போர்க்கு
மகவுடனே பெருஞ்செல்வ மாநிலத்து வளர்த்தருளி
யகமகிழச் செய்திடுவா னணிபாவி னன்குடியிற்
குக சரவ ணோற்பவனங் குறத்திமயல் கொளுமணியே.

கோநகர்க் கற்பகவிநாயக கலாசாலைத் தலைமைத் தமிழாசிரியர்
வித்வான்

### திரு. வி. அ. பரிமேலழகனார்:—

தேவையம் பதியில் வாழ்திரு ராம
நாதனற் செழுந்தமிழ் தெளிந்தோன்

பாவல ரெவர்க்கும் பண்புறு விருந்து
பரிவுட னளிப்பதற் கியாத்த
நாவலர்க் கிறைசீர் ஞானசம் பந்தர்
நற்றமிழ் நவமணி மாலை
தேவரு நுகராத் தீஞ்சுவை மலிந்து
தெள்ளமு தாகுமால் மன்னோ.

கல்லா தவருங் களிக்கத் தமிழ்சொல் கவினுடையான்
மல்லார்ந்த தேவை வருராம நாதன் வளர்சுவையி
னல்லாவின் பாலி னறுந்தேன் கலந்தன்ன நாடுபுகழ்த்
தொல்லாவி னன்குடி யந்தாதி யொன்று தொடுத்தனனே.

பரிமணங்குடி

## திரு. மு. முத்துப் பிள்ளையவர்கள்:—

சிவசமய மோங்கவரு சீர்காழிச் செல்வர்
நவமணிமா லைப்பா நவின்றான்—கவிமழைபெய்
விற்பனக்கார் தேவைவள மேவிடச்செய் காருண்யச்
சற்குணன்வே ராமநா தன்.

சுபம்.

உ
சிவமயம்.
பாலறாவாயர் துணை.

# ஞானசம்பந்தர் நவமணிமாலை.

## காப்பு.

கார்மருவு சோலைக் கடிக்காழி நன்னகரிற்
பேர்மருவு சம்பந்தப் பிள்ளைபத—மேர்மருவச்
செய்யு நவமணி மாலைக்குச் சீரருளுங்
கையஞ்சு நால்வாய்க் களிறு.

## நூல்.

### பலவிகற்பப்பஃறொடை வெண்பா.

பூத்துப் பொலிதடத்துப் போந்து திருக்கோயிற்
சீர்த்தித் திருக்கோ புரங்கண்டு செவ்வாயா
லம்மேயப் பாவென் றழைத்தே யழுதருளச்
செம்மேனி வெண்ணீற்றார் தேவி யகமகிழ்ந்து
பொற்கிண்ணத் தேதன் புணர்முலைப் பால்கறந்து
ஞானங் குழைத்தூட்ட நாவன்மை பெற்றசேய்
சீரடியை நெஞ்சமே சேர். (1)

### அடிமறிமண்டிலவாசிரியப்பா.

சோரத் தகுவது சிவனடி யார்குழு
சாரத் தகுவது சம்பந் தன்பதம்
கூறத் தகுவது குலவவன் பதிகம்
ஆரத் தகுவ தன்னவன் புகழே. (2)

## வெண்கலிப்பா.

புகழ்கேட்டிக் குருகாதார் புன்னெஞ்சு கன்னெஞ்சே
திகழுனது திருப்புகழைத் தெரியாதார் கயவரே
ஞானப்பா லுணவுண்டு நலமருளும் பெருமானே
தேனெப்பா முன்பாடற் செல்வமிலார் வறியரே
பொற்கிண்ணங் காத்துவைத்துப் புனிதசிவ ஞானத்தாற்
சிற்பரனைச் சுட்டியருள் சிறந்துநலந் தருந்திருவா
னுதருவை யெனதுள்ளத் துறையவைத்து நெடுநாளாத்
தனதடிமை கொண்டவா சார்ந்து. (3)

## சிந்தடிவஞ்சிப்பா.

சாற்றுகின்றவ ரிடர்களைந்தருள் தருவதுண்டுகாண்
பேற்றைவேண்டிநீ பிறிதுதேடுதல் பிழையதாகுமால்
ஏற்றையேறிய விறைவனைத்திரத் திலங்குகந்தனைக்
காழிப
பதிவரு ஞானசம் பந்தமா மணியைத்
துதிசெய் துயர்கதி துன்னுக நெஞ்சமே. (4)

## கைக்கிளைமருட்பா.

மென்சொன் மடக்கிள்ளாய் மேவுசம் பந்தனிட
மென்சொ லுரைத்திங் கிடரறுப்பாய்—தென்சொல்
மருவுசெவ் வாயனை மன்னிக்
காமநோய் போக்குங் கருத்துடை யேனே. (5)

## வெளிவிருத்தம்.

ஏனமு மன்னமு மறியா விறைமக னென்பார்கள்
கானவர் மகள்மண நேடிய காவல னென்பார்கள்
வானவர் பதிதரு தேன்மொழி யாளிறை யென்பார்கள்
மானிறை காகிரை காழியின் மன்னவ னென்பார்கள் (6)

## ஆசிரியத்தாழிசை.

பாரவர் விண்ணவர் பணியுங் காழியிற்
சீருறு சம்பந்தன் றிருவ டிப்புணை
நேருறப் பவக்கட னீர்க டப்பமால். (7)

## கலித்துறை.

மாலொடு பிரமனு நேடியு மறியா மன்னவனைப்
பாலொடு தேன்மொழி வாயா லழுக பான்மையினாற்
சேலடு வாள்விழி மாதொடு வந்து சிவஞானம்
பாலொடு நல்கப் பண்ணுசம் பந்தப் பாவலனே. (8)

## வஞ்சி விருத்தம்.

வல்ல சம்பந்த மன்னவா
நல்ல தேயருள் நாவலா
எல்லை யில்புக ழெய்துதாள்
புல்லு நெஞ்சினேன் பூவிலே. (9)

## வாழ்த்து.

வாழிதிரு ஞானசம் சம்பந்தன் மலரடிகள்
வாழிதமிழ் சைவம் வளர்ந்து.

முற்றிற்று.

---

உ

சிவமயம்.

பாலசுப்பிரமணியர் துணை.

# ஆவினன்குடி அந்தாதி.

## காப்பு.

சீரா வினன்குடியிற் செல்வன் குமரேசன்
போரார் திருவடிக்குப் பேசுகின்ற—நாரார
மந்தாதி நூற்றுணையா மானைமுகன் சம்பந்தன்
செந்தா மரைப்பதத்துச் சீர்.

## நூல்.

திங்களுங் கங்கையுங் கொன்றையுஞ் சூடுஞ் சிவபெருமா
னங்கவன் பங்கினி லங்கயற் கண்ணம்மை யாமிருவர்
தங்களின் சேயென் றிருமாப் படையத் தனிவடிவேல்
செங்கையி லேந்தித் திருவா வினன்குடி சேர்ந்துளனே. (1)

உளமொன்றை யெண்ண விழியொன்றை நாட வுறுபவமேல்
விளைகின்ற வித்தா வினைசெய்து நாளும் வெதும்புகின்றேன்
களையென்று நல்ல பயிரென்று மாயுங் கவினளித்துத்
தளர்வின்றி யாட்கொள்ளு வாயா வினன்குடி சார்ந்தவனே. (2)

தவமுடை யேனல்லன் றவஞ்செயும் பேற்றினிற் சார்ந்திலங்கும்
பவமுடை யேனல்லன் பாழ்மனப் பேயெனைப் பந்தித்திங்ங
னவமுடைப் புன்னெறி யாழ்த்து நிலையி லடியனுய்வ
தெவனருள் சீரா வினன்குடிக் கூர்வே லிறைபவனே. (3)

வன்னெஞ்ச னேனுனை வந்தித்து நாளும் வழுத்துகின்றே
னின்னஞ் செழுத்தோதி யேதப் பிறவி யிடாறுத்துச்
சின்னஞ் சிறியசெம் பொற்பாத தாமரை சென்னிவைத்தா
ளன்னஞ் செறியா வினன்குடி வாழும் வரோதயனே. (4)

தயவுடை யாயன்பர் சாற்றிய செந்தமிழ்ச் சார்புடையாய்
கயல்விழி யம்மையின் கண்ணனை யாயிறை கண்வருவா
யுயர்வுடை முந்நான்கு கண்ணுடை யாயெனை யுன்னையன்றி
யயர்வறுத் தாள்பவ ராரா வினன்குடி யாண்டவனே. (5)

ஆண்டவ னென்றுனை மாநில மக்க ளழைப்பரெனைக்
காண்டகு நல்லடி யானெனக் கூறுவர் காதலினீ
வேண்டுமுன் சீரடி யானென் றுரைத்து விரும்பினையேல்
யாண்டுந் தொடர்பு விடோமா வினன்குடி யற்புதனே. (6)

புத்தம் புதிய நெறிகளிற் சென்று பொறிகலங்கி
முத்த மருப்புக் களிறுகள் வாழ்க்கை முழையரியோ
டொத்து நடத்து முனதா வினன்குடி யூரைமறந்
தெத்தனை நாள்கழிப் பேனருள் செய்வதென் றீச்சுரனே. (7)

சுரர்தம சேனைக் கிறையெனப் போற்றச் சுரபதிதன்
வரமிகும் பெண்டெய்வ யானைக் கிறையென வாழ்த்தமலை
யுரமுறுஞ் சீரா வினன்குடி யுள்ளா யுனதிணைத்தாட்
பரமுறும் பேறளித் தாட்கொள்ள வேண்டுவன் பண்ணவனே. (8)

பண்ணோடு நின்புகழ் பாடுதற் கேற்ற பயிற்சியிலேன்
மண்ணோடு மங்கையர் வன்பொருள் பாலிச்சை வைத்துனது
விண்ணாடு சேவடி வேண்டாது நாள்பல வீணழித்தேன்
கண்ணாள வுன்சரண் காவா வினன்குடி காத்தவனே. (9)

காத்தற் றொழில்செய் திருமான் மருகன் கடமத
மூத்த களிற்றுக் கிளையோ னலைநஞ்சை முன்னருந்தி
யேத்தும் புகழ்பெறு மீசற்கு மிமய மலைமகட்குங்
கார்த்திகை மாதர்க்குஞ் சேயா வினன்குடிக் கற்பகமே. (10)

கற்பக நாடு தழுவுஞ் சிகரக் கவின்பழநி
வெற்படி வாரம் விளங்குந் திருவா வினன்குடியை
யற்பகங் கொண்டு தொழுவார்த மல்ல லகற்றிவளர்
கற்பதந் தந்தாளு வாளு வினன்குடி நாயகனே. (11)

நாயிற் கடையே னுனதருள் நாடி நலம்பெறுவான்
தாயிற் சிறந்த தயவுடை யாயென்று சார்ந்தனனென்
வாயிற் சிறுபுன் சொலுமேற்று வாழ்வருள் மாநிலத்துக்
கோயிற் றிருவா வினன்குடி வாழ்வுடைக் கொற்றவனே. (12)

கொற்றங் கொளும்வடி வேல்கொண்டென் றீவினைக் கோதறுத்து
மற்றென் மனமிங்கு மாயை வசப்பட்டு மன்னுநெறிச்
சுற்ற மிதுவென வோராது செல்லுந் தொழிலகற்றிப்
பற்றுன் னடிக்கே யருளா வினன்குடிப் பார்த்திபனே. (13)

பன்னும் புகழா வினன்குடி பாடிப் பரிசுபெற
வுன்னு மெனதுள்ள மென்னினும் பன்னா ளுனைப்பகர்ந்து
மின்னு முனதரு ளெய்தாத காரண மென்னெனது
முன்னை வினைப்பலன் முந்தும தோவருள் முன்னிற்கவே. (14)

முன்னைப் பழமைக்கு முன்னாக நின்றருள் மூழ்குவிப்பாய்
பின்னைப் புதுமைக்கும் பின்னின்று வாழ்வு பெரிதருள்வாய்
தன்னைப் பிரானென்று சார்ந்தவர் மேலாந் தகையுறச்செ
யுன்னைப் பணிந்தே னுயரா வினன்குடி யுத்தமனே. (15)

மன்னவ னேயுன தாணையின் கீழுறு மக்கள்பல
ரென்னினு முன்னரு ளுன்பத மென்றுநா னேக்கமுறல்
மன்னும் பெருமைக் கிழுக்காகு மாதலின் வாழ்வுகொடுத்
தென்னையுந் தேற்றல் கடனா வினன்குடி யெம்மிறையே (16)

இறைப்பொழு தேனு மொருவழி நில்லா தியங்குமனத்
துறைப்புறும் புன்செயல் மேலெனத் தோன்ற வுணர்ச்சிகெட்டுக்
கறைப்பட் டொழிந்து கழிகின்ற வாழ்க்கை கழிந்துனது
சிறப்புணர் காளென்று சீரா வினன்குடித் தெள்ளமுதே (17)

தெள்ளுஞ் சுவைமிக்க தீந்தமிழ் நூல்பல சிந்தைவைத்திங்
குள்ளு முணர்வுநின் பேரரு ளாற்பெற்று மூழின்வலி
தள்ளுஞ் சிறுதொழில் சார்ந்தேன் றிருவருள் தந்தெனையாள்
வள்ளஞ்சுடர்வடி வேலா வினன்குடி மாதவனே. (18)

மாதா வுதரத்து மன்னுந் தொழில்மிக வாய்த் திளைத்தே
னாதார முன்பத மன்றிமற் றியாதிங் கடியனுக்குத்
தீதா கியமைந்த னேனும் புரத்தலுன் சீர்த்தியன்றோ
போதா யருடரச் சீரா வினன்குடிப் புண்ணியனே. (19)

புண்ணியஞ் செய்தற்குப் பூவுண்டு நீருண்டு பொற்கமலத்
தண்ணெனு நின்னடித் தாளுண் டிருந்துந் தரணிமிசைக்
கண்ணும் பிறவாம் புலன்களு மென்னைக் கறைநெறிக
ளெண்ணும் படியீர்த்த லென்னா வினன்குடி யின்புருவே(20)

உருவம் பலமற் றுணர்ச்சி பலப்பல வுற்றொழிந்த
பருவம் பலநின்ற பண்பும் பலப்பல பாழ்கழித்தேன்
திருவந் தடையப் பெரும்பேறு செய்தவிச் சென்மத்தினிக்
கருவந் தடையாது காவா வினன்குடிக் காதலனே. (21)

தலைப்பட் டெழுமன்பு சார்வோர்க் கருளிச் சரணளிப்பா
யலைப்பட் டெழுநஞ்சை யுண்டோன் றிருமக னாதலினால்
நிலைப்பட் டெழுமன்பு நேர்நிற்க வுள்ள நினைவுகொண்டேன்
மலைப்பட்ட பல்வள மன்னா வினன்குடி மாமணியே. (22)

மாமறை தேடியுங் காணு தொளித்தருள் மாண்புடைநீ
தூமலர் தூவித் துதிக்குநின் னன்பர் துயரகற்றித்
தாமரைத் தாளிணை சென்னிவைத் தாளுந் தகுதிகண்டேன்
பூமலர்ச் சோலைப் பொழிலா வினன்குடிப் புத்தமுதே. (23)

தேவாதி தேவனைச் சீரா வினன்குடிச் செங்கரும்பைப்
பாவணர் நெஞ்சம் பயிலும் பிரான்றனைப் பற்றிநின்றோர்க்
கோவாத சீர்த்தி யுறும்பெரும் வாழ்வு மொருவனருள்
தாவாத செல்வமுஞ் சாருமென் றேதுவர் தக்கவரே. (24)

வரமுன்னை வேண்டுவன் சீரா வினன்குடி வாழ்வள்ளலே
பாமுன்னை நாடொறும் பாடிப் பரவவும் பங்கயத்துச்
சிரமூன்றொ டொன்றுடைத் தேவுதன் கைத்தலஞ் சிக்கியுழல்
தரமென்னை நீங்கவுஞ் சச்சிதா னந்தத் தனிப்பொருளே. (25)

தனிவடி வேலத்தர் சீரா வினன்குடிச் சைலமிசை
யினிதமர் மங்கை யிவள்கா னிலமுறு மித்தரையிற்
பனிதரு நன்னுதல் கூந்தல் மணமலர் பற்றுமளி
கனியிமைப் பாங்கண்கள் நானில மங்கையிந் நன்னங்கையே. (26)

நங்களைக் காக்கும் பிரானு வினன்குடி நன்மலைமேல்
மங்கையின் வானிடை கொங்கைகள் தாங்க வருந்தல்கண்டுங்
கொங்கமர் கூந்தற் குழன்மலர்த் தேன்கொள் குறிப்பினினீர்
இங்கணைந் தீரேற் பழியுமை நாடிவந் தெய்திடுமே. (27)

எய்வடி வேல்விழி வாரியுங் கொங்கை யிருமலையும்
பையல்கு லுமும் பச்சைக் குழலாம் பருவிடமுஞ்
சைவம் பொலியா வினன்குடி வெற்பிற் றனித்திருப்பப்
போய்வந்த நுண்ணிடை வாயமு துற்றது பொற்புறவே. (28)

பொற்பிற் றிகழா வினன்குடி யானிப் பொதும்பருயர்
கற்பக நாடும் நுகர்வான் விழையுமுன் காதலிசை
யற்புறக் கேட்டுச்செவ் வாயமு துண்டு னழகுகண்டு
முற்படு மேனி முகர்ந்துமெய் சேர்ந்தின்ப மூழ்கினனே. (29)

கின்னரி மாலை யணியா வினன்குடிக் கீர்த்தியன்சீர்
மன்னுஞ் சயிலத்து நம்மைப் பிணைத்தற்கு வந்தமுன்னூழ்
பொன்னின் மலைமுடி யுற்றோ ரடியிற் பொருந்தினர்பாற்
றுன்னும் படியா னேர்குனித் தாலொப்பத் தோன்றுவதே. (30)

தோன்றாத் துணையா வினன்குடி யான்வரைத் தோகையிவள்
கான்றாழ் கடம்பயி லன்னங்க ளேத்துங் கவினாசி
தேன்றூர் புரிகுழ லாளிவட் சேர்ந்த செயல்தெளியி
னூன்றாக் கனவுச் செயலிது வன்றிமற் றொன்றில்லையே.( 31)

ஏரா வினன்குடி யீசர் சிலம்பி லிரவுவரப்
பேரேத முற்று விழியுறங் காகிலை பெற்றயர்ந்தேன்
போரே றெனுமதன் தென்மலைக் கான்மதி புக்கெதிர்க்கு
நீரா ரிரவெல்லை நீங்கியெல் லைக்காண நிர்ப்பந்தமே. (32)

பந்த மறுக்குந் திருவா வினன்குடிப் பைம்பொழில்வாய்
முந்துவை யேன்மன மேயங் குனக்கு முதிரமுதந்
தந்தபெண் ணங்கைபைத் தந்தாளு மாங்கனி தார்குழலாள்
வந்தனை யாற்றிய பின்னையுந் தந்தவன் மாமகனே. (33)

கன்னெஞ்ச னேனுக் கருளா வினன்குடிக் கற்பகத்தின்
பொன்னஞ் சயில மெனும்புயத் தாய்புனன் மண்டியெழுந்
துன்னும் பெரிய கடல்வளைந் தானு முணர்வழியா
நின்னெஞ்சு சோர நிகழ்ந்ததென் னேவிங்கு நேருரையே(34)

உரைக்கும் புகழா வினன்குடி யான்வெற்பை யுற்றருகில்
விரைப்பைம் பொழிலிடை யென்மனப் போதக மேவியநாள்
வரைப்பல் வளங்கொளு மானவர் வாளினர் வந்துதம
துரத்திற லங்குசத் தாலே மடக்கின ருண்மையிதே. (35)

மையேறு மீசர் வளரா வினன்குடி மால்வரைமேற்
பொய்யோ வெனுமா தரைப்பணி யான்மதி போகுமெனி
லையோ வினியொரு சிற்றெறும் பிற்கு மருவரைகள்
வெய்யோ னுலவு முலகத் திரையாகி வீழ்வுறுமே. (36)

உற்றவ ராசை யொழியா வினன்குடி யொண்சிலம்பில்
மற்றவர் யாரினு மன்புடை யானென மன்னுவைநீ
கற்றையங் கூந்தற் கருங்கண் வலைக்குட் கவலையுறும்
பெற்றிய னென்னையுன் சொல்லம்பு பாய்ந்து பெரிதடுமே. (37)

மேலா கியபத மீயா வினன்குடி வெற்பநனி
மாலா கினைநீ கதிர்மதி யாயிங்கு மன்னுதலைப்
பாலா கியவிருள் கண்டு மயங்கல் பழியலவோ
நூலா தாவுடன் கற்றோ ரறியாத நுட்பமுண்டே. (38)

முண்டக மென்னு முகமிருட் கூந்தன் முதிர்தனுவை
யெண்டகு நெற்றிநீ லோற்பல மாகு மிருவிழிகள்
தொண்டைவாய் காந்தட் கரங்கச் சடங்காத் துணைமுலைகள்
கொண்டென தாவி திருவா வினன்குடி கூடியதே. (39)

அத்தன் றிருவா வினன்குடி யான்வெற் பமருமிவள்
நத்துஞ் சுகம்பெறு விண்டுமா லாயின னங்கைபங்கன்
பித்தனுப் கின்றன னன்முக னேதும் பிரமமுற்று
வித்தினி கானு திறைவற் பழித்தன மீதழகே. (40)

மீயுயர் சீரா வினன்குடி யான்வளர் வெற்பகத்தே
போயுளஞ் சோரான் பொலிகொங்கைக் குன்றுகள் பொற்கயல்சேல்
பாயு மிருவிழி வாரிதி வாசம் பயின்றுநில
மேயுங் குழற்கா னகங்கடந் தானெந்த லெவ்விதமே. (41)

மேதக்க கீர்த்தி மிகுமா வினன்குடி வெற்பிலுறுங்
காதற் கிளிமட வார்வண்ட லாலோ கடிகமழுந்
தாதிற் றிகழ்மலர் கொய்தத னாலோ தளர்ந்ததுடல்
சீதப் புனல்படிந் தாடிய தாற்கண் சிவந்ததுவே. (42)

சிவந்தருஞ் சீரா வினன்குடி யான்வரைத் தெள்ளமுதே
நவந்தரு நீர்ச்சுனை நீயா டியததை நன்னுதலுக்
குவந்த திலகமிட் டாபர ணங்க ளுறத்திருத்திச்
சிவந்தகண் வெண்மை யதாங் கருஞ்சுனை தேடினபே. (43)

தேடித் திரிபவர் செல்வம் பெறுமா வினன்குடியி
லாடித் திரியு மிவளேனல் காவல ளல்லளிவ
ளோடித் திரிகின்ற மானோடு வானல்ல னுற்றவிவர்
நாடித் திரியுஞ் செயல்காட்டு மிங்கிவர் நாட்டங்களே. (44)

கள்ளமர் சோலைக் கவினு வினன்குடிக் கார்வரையிற்
றள்ளருங் காதல் தருமிவள் பாவை தனையனைத்துப்
பிள்ளையென் றேதன் முலைப்பால் கொடுக்கின்ற பெற்றியினுள்
வள்ளனின் சோக மறிந்ததை மாற்றும் வழியிலளே. (45)

இல்லார்க் கருளா வினன்குடி யீச ரெழில்வரைமேல்
வல்லா யுனது கையுறை பெற்று மனமகிழ்ந்து
புல்லினள் வாய்முத்த மீந்தனள் பொங்கிப் புடைத்துவிம்மிக்
கல்லென வன்மை மிகுதனம் வைத்துக் களித்தனளே. (46)

தனந்திகழ் சீரா வினன்குடி யான்வரைத் தாழ்குழலே
மனந்திகழ் காவலர்ப் பற்றியுன் னுள்ள மகிழ்வுறுவா
யனந்திகழ் வாவியிற் பூக்கொணர் வேனு னனங்கனிங்கு
தினந்தொடுத் திட்ட செயலழிந் தோடிடச் செய்குவமே (47)

செய்யா ளுறையுந் திருவா வினன்குடிச் செம்மலைமேற்
பையா டியவல்குற் பைந்தொடி யீரென்பாற் பற்றுவைத்து
நையாத நீர்ஞ்சுவைத் தேன்றினை மாத்தரி னற்றவமே.
வையே ரயிலவ னிங்கிருந் தானுசை வைத்தல்லவே. (48)

வைத்த பொருளா வினன்குடி யான்வரை வார்பொழில்வாய்
மொய்த்து மதுவுணும் வண்டினங் காளிவண் முந்திவந்தென்
சித்தங் குடிகொண்ட சீராளர் போந்த செயலறியே
னெத்துவந் திங்கவ ருற்று லெனக்கின் னுரைசெய்யுமே (49)

செய்யார் தடம்பொழிற் சீரா வினன்குடிச் செல்வரிங்கு
மெய்யார்க் கிடுவதற் கெத்தனை யின்னல் விளையுமந்தோ
மையா ரிருளன்னை ஈயூர் நிலவு வலியபறை
வையா ரலகுடை வாரணங் கூகை வருத்துவதே. (50)

வருத்தந் தணித்தருள் வைவே லுடையவன் வந்திப்பவர்
கருத்து முடிப்பது வேதொழி லாகக் கருதிமருத்
தருத்தண் பொழிலா வினன்குடி சார்ந்து தகவுடனே
யருத்தங்கள் வாரி யளிக்கின் றனன்பெற் றமருமினே. (51)

அமரர்க் கிறைவன் பெறுதெய்வ யானையி னன்புபெற்றோ
னமரற் கிளஞ்சேய் குறிஞ்சி நிலமக ளையகனீர்த்
தமரக் கடல்சூழ் புவிமுழு தேத்துந் தகவுடையான்
குமரக் கடவுள் குலவா வினன்குடி கூடுமினே. (52)

மின்னை முன் னேவென்ற நுண்ணிடை வள்ளியை வேழமுகன்
தன்னைத் துணைகொண்டு வேட்டவ னன்பு தரவிருந்தும்
கொன்னே யவநெறி கூடிக் கலங்கிக் குழிவிழுதல்
கன்னல்தங் கைவைத்துச் சர்க்கரை தேடற் கவினுறுமே. (53)

கவிவாணர் பாட்டொலி காரிகை யார்பண் கருதுமொலி
புவிவாணர் தேரொலி மாதவர் வேதம் பொலியொலிகட்
செவியார வீசனின் தேவாரமோடு திருப்புகழின்
சுவையா ரொலிக ளருவா வினன்குடி துன்னுமினே. (54)

நும்மைப் படைத்துப் புரப்பவ னூபுரத் தாளிருவர்
தம்மைப் புடைவைத் தினிதா வினன்குடிச் சார்புவைத்தான்
வெம்மைத் திறற்சூர் தடிந்தவை வேலுண்டு வெவ்வினைக
ளிம்மைநம் பாலணு காதே துணைசெயு மேத்துமினே. (55)

தும்பை மலரன்ன சோதிவெண் ணீற்றுச் சுடர்வடிவச்
சம்புவின் கண்மலர் தோன்றிப் புனலிடைத் தண்ணிமயக்
கொம்பனாள் செங்கர மாறு முகஞ்செயக் கோலமொடு
நம்பெரு மாறு வினன்குடி வந்தன னிலத்தே. (56)

அத்தன் முகமொன்றொ டம்மை முகமொன்றை யார்ந்துபொய்கை
நத்து மடந்தைய ரைந்தோ டொருவர் நகிலருந்தி
முத்த நகையுமை பங்காளர் காண மொழிபயின்று
வித்தக னாகித் திருவா வினன்குடி மேவினனே. (57)

வின்னாண் விழியுமை நாபுரந் தோன்று வியன்மடவார்
முன்னா ளுயிர்த்த புகழ்நவ வீரரில் முன்புவந்தோன்
தன்னாற்ற லாற்புவி யேழுந் துயர்செய் தகர்கொணரப்
பின்னாள தாதனங் கொண்டா வினன்குடி பேணினனே. (58)

பேணிய நான்முக னுள்ளத் தகந்தை பெரிதடைந்து
கோணிய சிந்தைய னுகப் பிரணவஞ் சொல்பொருளைக்
காணுவை யோவென்ன வோராது நின்றவற் காய்ந்துகுட்டி
நாணுஞ் சிறைவைத் தவனு வினன்குடி நாயகனே. (59)

நாயே னெனக்குத் துணையா வினன்குடி நாதனிறை
நீயா டியகாத் தேவுக்கு நான்மறைச் செம்பொருளைப்
போயா தரவோ டுபதேசஞ் செய்து பொலிந்தவனல
மாயோனை யைந்தலைப் பாயோனை மாமனு வைத்தவனே. (60)

தவறே வடிவுடைத் தாரகற் செற்றவன் சையமொன்று
கவாய்ப் பொடிபட வைவேல் செலுத்திய காவலன்றிண்
ணவவீரர் முன்வீர வாகுவைத் தூது நடத்தும்பிரா
னிவனே ரினிதா வினன்குடி வாழ்வதெம் மின்றவமே. (61)

இன்னம்பல் யோனியி லெய்தா நிலையை யெமக்கருள்வான்
முன்னம்பல் புன்றொழி லாற்றிய சூரனை மொய்த்தகிளை
தன்னைபெற் கோபனைச் சிங்க முகனைச் சயித்துவெற்றி
துன்னிய செல்வன் றிருவா வினன்குடித் தூயவனே. (62)

வன்றிறற் சூர னுடலிரு கூறாகி வான்மயிலும்
பொன்றிகழ் கூரலின் சேவலு மாகிப் பொருந்தவென்றி
யொன்றையின் றூர்திகொண் டொன்றைத் துவசத் துயர்த்திமலை
நின்றவன் சேரா வினன்குடி நாடமி னேர்படவே. (63)

வேலா யுதங்கொடு சூராம் பகையட்ட வென்றிவிழா
மேலான விண்ணவர் கொண்டாடு நாளந்த விண்ணிறைவன்
பாலா தரவு தருதேவ சேனு பதிப்பெயரைக்
கோலா கலனு வினன்குடி யார்க்குக் குறித்தனனே. (64)

குறுநகைச் செவ்வாய் கொடியிடை வாட்கண் குரும்பைமுலை
பிறைநுதல் மைக்குழல் சங்கன கண்டம் பிறங்குகொக்கின்
முறியன கைக ளுறுதெய்வ யானையை முந்துமன்பு
நெறியினிற் கைப்பிடித் தோனா வினன்குடி நின்மலனே.
(65)

மல்கும் புகழா வினன்குடி யான்முன்பு மால்வரையி
லல்குந் துடியிடை வள்ளியா ரேன லரும்புனத்துப்
பல்குந் திருவிளை யாடல்கள் செய்து பசித்தவன்போற்
செல்விபாற் றேனுந் தினையு மிரந்துணுஞ் செம்மன்மன்னே.
(66)

செம்ப வளந்திகழ் வாய்முல்லை மொட்டிற் சிறக்குநகை
யம்பன நீள்விழி கொண்மூ விளங்கு மழகுடையாள்
நம்பிமுன் பெற்றருள் நங்கையை வேட்டுயர் நாயகன்சீர்ச்
சம்பரன் மைந்தன் றிருவா வினன்குடி சாருமினே. (67)

மின்வளர் சாரற் பரங்கிரி செந்தில் விழுத்தகுசீர்
மன்னுந் திருவா வினன்குடி யேரக மாதிரங்க
ளுன்னும் பலவண் பழமுதிர் சோலை யுவந்துறையு
மன்னன் றனிவடி வேல்காங் கொள்ளு மறையவனே. (68)

மறவாத சிந்தை யொடுமா றெழுத்தோது மாண்பினர்க்குப்
பிறவா நெறியளித் தீடில் பதந்தரும் பெற்றியுளான்
இறவாத அன்புதன் றாளிணை நிற்க வெனக்கருளு
மறவோன் றிருவா வினன்குடி யுள்ளத் தமையுமினே. (69)

அம்மையு மப்பனு மாகிப் புரக்கு மருளுடையான்
செம்மை தெறுநிலை செல்லாது காக்குந் திறலரசன்
மெய்மைப் பெருநெறி காட்டிக் குருவென மேவிநின்று
ளிம்மையி லின்பந் தருமா வினன்குடி யெந்தெய்வமே. (70)

தெய்வத் தமிழ்ச்சுவைத் தேனமு துண்ணத் திகழ்மதுரைப்
பைவைத்த நாகா பரணற்கு மும்முலைப் பைங்கொடிக்கு
மெய்வைத்த சேயாகி யுக்கிரப் பேரின் விளங்கிமுன
மைவைத் தாசுசெய் தோனு வினன்குடி யற்புதனே. (71)

தன்னே ரிலாத வடிவேல் செலுத்தித் தகவுடைய
முந்நீர் சுவற்றும் பெருமாள் மகவான் முடியின்மிசைப்
பொன்னேர் வளைவிடும் பொற்பினன் சென்றொன்று போக்கி
[யுறு
மின்னேர் மலையடித் தோனு வினன்குடி விண்ணவனே. (72)

விண்ணவர் நாளுந் தொழுமா வினன்குடி வேண்டிநின்று
லெண்ணிய வெண்ணியாங் கெய்திப் பெருமை யினிதுறலா
மண்ணல் திருவடி மாருத வன்பி னருணகிரிப்
புண்ணியன் பெற்ற புகழறிந் தோமினிப் போற்றுவமே. (73)

போற்றுங் குமர குருபரன் மூகையைப் பொற்புமிக
மாற்றிய வேலவன் செந்தமிழ் ஞானம் வளர்த்தபிரா
னேற்றிய வன்பர் தமர்குத் திருவரு ளீவனெனச்
சாற்றித் திருவா வினன்குடி நின்றனன் சால்புறவே. (74)

வேதனை முன்னுட் சிறையிடு வித்த விமலனையென்
நாதனைத் திருவா வினன்குடி யானை நறுங்கமலப்
பாதனை யெற்குப் பலகா லருள்தந்த பண்ணவனைத்
தீதெனைச் சாராது காக்கும் பிரானையான் சிந்திப்பனே. (75)

சிந்தித்த காழிச் சிவபாத நெஞ்சத் திருமுனிவர்ப்
பந்தித்த வல்வினைப் பற்றுவிட் டோடப் பகவதியார்
முந்திப் புரிந்த தவப்பயன் மன்னி முதிர்ந்ததென
வந்தித் தரையாண் டவனு வினன்குடி வாழ்வள்ளலே. (76)

வள்ளத் துமைதன் முலைப்பாலில் ஞான மகிழ்ச்சிமிகத்
துள்ளக் குழைத்துத் தரவுண்ட தூயவன் சோதியன்பு
கொள்ளத் தருதிருப் பொற்றாள மேற்ற குரிசினரும்
வள்ளற் பழனத் திருவா வினன்குடி வந்தியுமே. (77)

எத்தும் பணிலச் சிவிகையும் பொன்னி னிருங்கிழியுந்
தீத்தழ லாடி தரப்பெற்ற செய்கந் திருமதுரை
காத்த செழியன் சமணும் புறமதங் காதலிக்கப்
பேர்த்தும் பெருமை தருமா வினன்குடிப் பிஞ்ஞகனே. (78)

கன்னெஞ்ச ராகுஞ் சமணர்க ளிட்டதீ காவலனை
மன்னுஞ் சுரப்பிணி யாகப் பொருந்தி வருத்தவருள்
சின்னம் பெறுநந் திருஞான சம்பந்தன் செல்வமிகத்
துன்னுந் திருவா வினன்குடி சேர்ந்து துலங்குவதே. (79)

தேருஞ் சபையிற் றீயிடு மேடு சிறக்கவெடுத்
தாரும் புனலாற் றெதிரேற்றி மாறனை யாண்டுசமண்
சாருங் கொடியர் கழுவேற வின்னருள் சாதித்துநண்
ேரும் வளவயற் சீரா வினன்குடி யுற்றுளனே. (80)

உற்றவர் பந்த மொழியா வினன்குடி யூருடையான்
முற்றிய கீர்த்தி மயிலைச் சிவநேசர் முன்பளித்த
கற்றைக் குழலென்பைப் பூம்பாவை யாக்கிக் கவினளித்த
நற்றவன் காணுமின் னானிலத் தீரன்பு நாட்டுமினே. (81)

நாட்டமீ ராறுடை நாதன் திருவாவி னன்குடியை
வேட்டுத் தொழுதவ ரிம்மையிற் பேறெலா மேவியுறுந்
தேட்டமும் பெற்று மனைமக்கள் பல்வளஞ் சேர்ந்துடலின்
வாட்டஞ் சிறிதின்றி வாழ்வா ரிதுவுண்மை வையகத்தே(82)

அகத்திருள் போக்கி நமக்கரு ளீபவ னைந்தொடொரு
முகத்தனி நாதன் றிருவா வினன்குடி முன்புணர்ந்து
தொகுத்தாம் பாசந் தொலைத்தில மென்றுபின் றுன்பமுறல்
அகத்தழ கோறும் பகுத்தறி வாற்சிறி தாயுமினே. (83)

ஆயன் றிருமரு கன்மயி லேறிய அப்பனெங்கள்
தாயின் மடித்தலஞ் சார்ந்தவ னுபகன் சாகசஞ்செய்
தேயும் பொழுதினில் வாய்முத்த மீயு மியல்பைமுகில்
தோயும் பொழிலா வினன்குடி மேவித் தொழுதெழுமே.
(84)

தொழுதுபல் தூமலர் தூவித் துதிக்கின்ற தூயவர்க்கு
முழுதுந் திருவருள் பாலித்து நால்வகை முத்தியினி
லொழுகு நிலைக்குத் தகவொன்றை யீயு மொருவனையெப்
பொழுதுந் திருவா வினன்குடி யிற்கண்டு போற்றுமினே.
(85)

போற்றும் பரசிவன் சச்சிதா னந்தப் புனிதவுருத்
தோற்றும் பொழுதா வினன்குடி யானின்பந் தொக்கதன
தாற்றலி னனந்த நல்லுருத் தாங்கி யடியவர்க்குப்
பேற்றைத் தருமென் றுரைப்பர் மலைப்புலம் பெற்றவரே (86)

மலையென வின்னருள் வாய்த்தவன் றனென வற்புறுத்து
நிலைமலை தோறும் வளரா வினன்குடி நின்மலனை
வலைவா வீர்க்கும் வழியுண்டு காதல் வளருநெஞ்சே
நிலைபெறுந் தாண்மல ரல்லும் பகலு நினைப்பதுவே. (87)

பதியெம் மிறையா வினன்குடி யானங்கி பற்றிநிற்ப
ததுவின் புனல்போ லுலகத் துறுபொரு ளார்ந்திருந்து
பொதுவின்றி நின்று தொழுதார்க் கருளைப் புரிந்துபிழை
வதிபு மனத்தின் வணங்கார்க் கருளான் வளருவனே. (88)

வன்மயில் வாகன னுன்மாக்கள் பற்றி வருமகந்தைப்
புன்மை மலங்கன்ம மாயா மலங்கள் பொருந்துமிவை
யன்மையிற் கட்புலன் றேன்றும் பொருள்க ளழிவடையுந்
தன்மைய வென்று தெளிந்தா வினன்குடி சாருமினே. (89)

மின்கிளர் சூரியன் மேவும் பகலின் வெயில்வருந்தி
முன்பெருந் தூக்க முறுவோனை நன்னிழல் மூசுகவென்
றன்புடன் கூறுவ துண்டோ பகுத்தறி வார்ந்தமக்காள்
தென்றிகழ் சோலைத் திருவா வினன்குடி சேருமினே. (90)

சேரப் புகழ்தரு சீரா ளனாறு திருமுகமும்
பாரப் புயங்களும் பங்கயக் கண்களும் பாவமொழித்
தீரத் திருவடி சேர்க்குங் குறிசொல் விருகாமுஞ்
சாரத் திருவா வினன்குடி நின்றனன் சத்தியமே. (91)

சத்தாதி யைந்தையுஞ் சண்முகன் பாலே தகச்செலுத்தேன்
பித்தாகி மாநில வாழ்வில் மயங்கிப் பெரிதுழன்றே
னித்தா திருவா வினன்குடி யாயென்று நின்றுநினைந்
தித்கா ரணியின் பகைகடந் தேனில்லை யேழையனே. (92)

அன்னை கருவிற் பிறவா நெறியெற் களித்தருள்வாய்
இன்னம் பிறவி வருமேல் வருந்தி யிளைத்திடுநான்
உன்னை மறவாது செந்தமிழ் பாடு மொருவரந்தா
பன்னும் பெருமைத் திருவா வினன்குடிப் பண்ணவனே.
(93)

பண்ணுயர் பாட்டி னிசையாக் கனியிற் படிசுவையாக்
கண்ணின் மணியி லொளியாயின் பாலிற் கலந்தநெய்யாத்
திண்ணறி வோர்கள் செயுந்தமிழ்ப் பாட்டிற் றிகழ்பொருளா
யெண்ணிட நின்றோன் றிருவா வினன்குடி யேந்தன்மன்னே
(94)

ஏந்தும் வடிவேற் பிரானைத் திருவா வினன்குடியிற்
காந்து சுடரான சோதியை வானவர் காதலனை
மாந்தர்கள் நாளும் வழிபாடு செய்கின்ற மன்னவனைப்
போந்த பவமறுப் பானையென் புந்தி பொருந்துகவே. (95)

பொருந்து முருவா யுருவின் னெளியாய்ப் புவனிமிசைத்
திருந்து மருவா யருவுரு வாகித் திகழுமெங்கோ
னருந்தும் வினைச்செயற் கேற்பப் பலன்தரு மான்மவிறை
மருந்து பிறவிப் பிணிக்கா வினன்குடி வாழ்பவனே. (96)

வாழ்வு தருமா வினன்குடி வேள்பதம் வந்தித்தனன்
தாழ்வு புகுமற்பர் கூட்டுற வால்வந்த தாட்சியெலாம்
பாழ்பட நல்வழி பற்றிநின் றேன்முன்பு பண்ணுதவத்
தூழ்வினை நற்பல னீயும் பொழுதவந் துற்றதுவே. (97)

உற்ற தவத்தர் மனத்தினும் வேதத்தி னுச்சியினும்
பற்று நறுந்தமிழ்ப் பாவலர் நெஞ்சினும் பண்புடைநூல்
கற்றவ ருள்ளத்துஞ் சீரா வினன்குடிக் காமர்வளப்
பெற்றி நகரினு மென்னித யத்தும் பிறங்குவதே. (98)

பிறந்து செழுந்தமிழ் நாடர சாண்டாய் பெரிதுவந்து
சிறந்த நறுந்தமிழ்ச் சங்கமுன் பேணினை சீர்ப்புகலி
யுறந்திரு வாளனுப் பைந்தமிழ் பாடினை யோதுமென்சொல்
சிறந்ததன் றேனு மருளா வினன்குடித் தேசிகனே. (99)

தேசஞ் செழிக்கத் திருவருள் செய்யுநஞ் சேய்குமரன்
வாசஞ் சிறக்கு மலர்ச்சோலை நானு மருங்கினும்பூ
மூசு மளிகள் முரலா வினன்குடி மூதெயிலைப்
பாச மொழிக்க வலமா மருக்கன் பனித்திங்களே. (100)

## வாழ்த்து.

பாவினங் குழுமிப் பயிறமிழ்ப் புலவோர்
பண்பொடு வாழிய கீர்த்தி
மேவிய தமிழுஞ் சமயமு மோங்கி
விளங்குக வேலவ னன்புத்
தேவிநங் குறமான் யானைதன் னணங்கு
திருவடி வாழ்கவிப் புவிமே
லாவினன் குடியிற் குமரநா யகன்று
ளம்புயம் வாழிய மன்னோ.

முற்றிற்று.

---

குறிப்பு:— இந்நூலுள் 26-ம் செய்யுள் முதல் 50-ம் செய்யுள் வரை உள்ள 25 செய்யுட்கள் அகப்பொருள் துறை களாயமைக்கப்பெற்றனவாகும். அவற்றின் துறைப் பெயர்கள் வருமாறு:—

1. துணிவு,
2. வண்டோச்சிமருங்கணைதல்.
3. முயங்குதலுறுத்தல்.
4. புணர்ச்சியின் மகிழ்தல்.
5. தெய்வத் திறம் பேசல்.
6. ஆயவெள்ளம் வழிபடக்கண்டிது மாயமோவென்றல்.
7. கண்படை பெறாது கங்குனோதல்.
8. தந்த தெய்வந் தருமெனச் சேறல்.

9. பாங்கன் தலைவனை உற்றது வினுதல்.
10. தலைவன் உற்றதுரைத்தல்.
11. பாங்கன் தலைவனைப் பழித்தல்.
12. கிழவோன் வேட்கைதாங்கற் கருமை சாற்றல்.
13. பாங்கன் தலைவனேடழுங்கல்.
14. இவ்விடத்திவ்வியற்றென்றல்.
15. பாங்கன் தலைவனை இகழ்ந்ததற் கிரங்கல்.
16. பாங்கன் தலைவனை வியத்தல்.
17. பாங்கி ஐயமுற்ருேர்தல்.
18. சுனை வியந்துரைத்தல்.
19. பாங்கிமதியின் அவரவர் மனக்கருத்துணர்தல்.
20. பாங்கி தலைவி பேதைமை ஊட்டல்.
21. தலைவி கையுறையேற்றமை பாங்கி தலைவற் குணர்த்தல்.
22. பாங்கி தலைவியைக் குறியிடத்துய்த்து நீங்கல்.
23. விருந்திறை விரும்பல்.
24. புலர்ந்தபின் தலைவி வறுங்களங்கண்டிரங்கல்.
25. தாய், நாய், ஊர் துஞ்சாமையும், நிலவு வெளிப் படலும் முதலியன.

முற்றும்.

சுபம்.

உ

சிவமயம்.

பாலறாவாயர் துணை.



## இந்நூலாசிரியர் செய்துள்ள நூல்களில் அச்சாகி வெளிவந்திருப்பவை.

1. குன்றக்குடிச்சுப்பிரமணியர் தோத்திரப்பதிகம்
2. திருஞானசம்பந்தர் பதிகம்.
3. மயூரகிரியுலா.
4. திருஞானசம்பந்தர் இரட்டைமணிமாலை.
5. திருப்பரங்கிரி மும்மணிக்கோவை.
6. நடராஜர் நவமணிமாலை.
7. குமரகுருபரசுவாமிகள் போற்றித்திருவகவல்.
8. ஞானசம்பந்தர் நான்மணிமாலை.
9. திருச்செந்திலிருபாவிருபது.